ஓம்.

பரப்ரம்மணே நம:

ஸ்ரீ சேஷாத்திரி சிவனூர் அருளிச்செய்த

# நாநாஜீவவாதக் கட்டளை.



திருத்துருத்தி இந்திரபீடம்.

கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்

**ஸ்ரீமத் சச்சிதானந்த சுவாமிகள்**

பதிப்பித்த பிரதிக்கிணங்க



துவாதசாந்த ஸ்தலவாசியும்,

சுவானுபூதிச் செல்வருமாகிய

ஸ்ரீலஸ்ரீ உலகசுந்தர சுவாமியவர்கள் எழுதிய

ஆரோப சித்திரப்படத்துடன்.




**எஸ். கந்தசாமி பிள்ளையால்**

மதுரை ஸ்ரீ மீனும்பிகை பிரஸில்

பதிப்பிக்கப் பெற்றது.

இரண்டாம் பதிப்பு.



விலை] **1953.** [அணா 6

## விவேக சட்கம்.

அனித்திய பூதத் தேகநா னன்று
விந்தியத் தரங்கநா னன்று
நனித்தவாங் கார பிராணவர்க் கங்க
ளன்றுநற் புந்தியு மன்று
தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குத்
தூரமாஞ் சாட்சிநா னென்றுந்
தனித்துநித் தியமாய்ப் பிரத்தியகான் மாவாந்
தற்பதப் பொருளதாஞ் சிவோகம். (1)

உற்பவன் விருத்த னன்றுநா னோர்கா
லத்தினும் நசிப்பவ னன்று
அற்பமாந் தேக காரியமான
அவையெலா மகங்கரத் தல்லால்
தற்பத வடிவாஞ் சின்மயமான
எனக்கிலை சகளநிஷ் களமா
யெப்புறத்தேனு மெல்லையற் றிருக்கும்
இன்பசிற் சொரூபமாஞ் சிவோகம். (2)

சத்திய ஞான னந்தமாம் பிரமத்
துதித்திடு மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகஞ் சேதனத் திடையே
நசிக்கும தேதென் விளம்பிற்
தத்து சொப்பனமுஞ் சுழுத்தியி லசத்தாந்
தன்மைபோற் சத்திலா திருக்குஞ்
சுத்தபூரணமாய் நித்திய மாகித்
துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். (3)



உ




ஸ்ரீ சற்குருவே நம:

## முகவுரை

சர்வதுக்க நிவர்த்தியும் பரமானந்தப் பிராப்தியும் முறையே நித்திய நிவர்த்தியாயும், நித்தியப் பிராப்தியாயும் பொருந்தியுள்ள சுத்தப்பிரமசைதன்யமே தனக்கு நிஜஸ்வ ரூபமாயிருக்க மனமுண்டாவதற்கு மூலமான அவிசாரப் பகையால் சம்பவித்த தன்னுடைய ஸ்வரூப ஸ்மரண மற தியே மாயை என்றும், அவித்தை என்றும், பிரகிருதி என்றும் சொல்லப்படுகிற அனாதி அஞ்ஞான சத்தியாகி மனதாகப் பரிணிமித்து, அஞ்ஞான மோக நித்திரையை உண்டுபண்ணி, மித்தையான ஜீவேசுர ஜகத்துக்கள், ஜன்ம ஜராமரணங்கள், தாபத்திரயங்கள் ஆதிவியாதி முதலான கோர சொற்பனங்களைக் காட்டுதலினால் இப்பவதுக்க சாக ரத்தில் மூழ்கித் தவிக்கின்ற ஜீவர்களில் சாதன சம்பன்ன ரான உத்தம அதிகாரிகள் சற்குரு சத் சாத்திரங்களின் உதவியால் சர்வ அனர்த்தங்களுக்கும் காரணமான அவித் தையின் நிவர்த்திக்கு வித்தையின் உதயமே காரண மென்றும், அவ் வித்தை உதயத்திற்குப் பிரமவிசாரமே கார ணமென்றும் தெளிந்து, ஜீவப்பிரம ஐக்கிய ஞானத்தை நேரே தெரிவிக்கின்ற நான்கு மகா வாக்கிய அர்த்தசார சுருதி சப்தத்தொனி முழக்கங்களால் அதாவது:— சிரவண, மனன, நிதித்தியாச, சமாதி, சாக்ஷாத்கார அப்பி யாசங்களினால் மேற்கண்ட அஞ்ஞான நித்திரையைக் கலைத்து, பவதுக்க சமுத்திரத்தைத் தாண்டி, முன் மறந்த தன் நிஜஸ்வரூபமான பிரமதிரத்தில் விழித்து, ஞான

சாக்கிரத்தை அடைகிருர்கள். இப்படி குரு சாஸ்
உதவியால் நீடித்த காலம் செய்துவரும் பிரம விசார
தால் பிரம ஸ்வரூபமே ஆன்மாவென்றும், அவ்வா
ஸ்வரூபமே பிரமமென்றும் பிரிவற்ற இவ்வைக்கிய
வேதாந்த மகாவாக்கியங்கள் ஒருமித்துத் தெரிவிக்கி
அகண்டார்த்தமென முமூட்சுக்களெல்லாம் அகம்பிரமநி
யம் செய்யவேண்டுமென்றும் கற்பிதத் தோற்றமெல்லா
அதிஷ்டான பிரமமன்றி அற்பமும் அயலாக இல்லை என
றும் சுருதியுக்தியால் நேதிசெய்து நிதம் அகம்பிரமம்
பிரமமகமென்று சந்தேகமின்றி அறியவேண்டுமென்றும்,
சர்வஜெகத்தும் வேறு, நான்வேறு, பிரமம்வேறு என்னும்
பேதபுத்தி, சர்வஜெகத்தும் பிரமமென்றும், அது நானென்
றும், நானதுவென்றும் வெகு திடமான பிரம நிச்சயத்தால்
நீங்குமன்றி, கர்மம், உபாசனை யாதொன்றினுலும் நீங்கா
தென்றும் ஆதலால் முமூட்சுக்களெல்லாம் அகண்டபரநிச்
சயம் அடைந்து, அதனுல் மரண முதலான அனந்தவித
பயதுக்கங்களுக்கு உற்பத்தி ஸ்தானமான பேதபுத்தியை
எவ்விதமும் நீக்கவேண்டுமென்றும், அப் பேதபுத்தியின்
நீக்கமே அபயபத நிட்டை என்றும், பந்தமற்ற மோக்ஷ
மென்றும் தெரிந்துகொள்ளவேண்டும், ஆதலினுல் அக
பிரம நிச்சயத்துக்கு அன்னியமாம் உபாயமெலாம் தூர
தள்ளி, பேதமான மன விகற்பங்கள் தோன்ருது தீர்ந்
போகும் வரை பிரியமுடன் அனவரதம் இடைவிடாம
சாதகமான அகம்பிரம நிச்சயத்தைச் சலியாது முமூட்ச
களெல்லாம் பழகவேண்டும். இதையன்றி மோட்ச
பெறுவதற்கு எளிதான உபாயந்தான் எவையுமில்லை.

2. பிரம விசாரத்தால் ஞானம் உண்டா
மந்த அதிகாரிக்குச் சுருதி, கிரம சிருஷ்டியைச்சொ



ஆரோப அபவாத யுக்தியால் பிரமத்தில் மனம் நிலைக்கச்
செய்யும் உபாயத்தைக் காட்டியிருக்கின்றது. அதை அனு
த்து, ஸ்ரீசேஷாத்திரி சிவனுரென்னும் மஹான் பிரம
த்திர முதலிய விரிந்த நூல்களைப் பார்க்கச் சக்தியில்
ரத மந்த அதிகாரிகளும் பிரமானுபவம் அடையும்
ண்ணம் நாநாஜீவவாதக் கட்டளை என்னும் இந்நூலில்
னியவசனரூபமாய்ப் பிரமஸ்வரூபத்தில் மனம் உபசாந்தி
அடையச்செய்யும் உபாயமான பெரிய விஷயத்தையடக்கி
வெளியிட்டருளினுர். அதில் அபின்னசத்தி அவிகிருத
முக்குணங்களால் பிரமாப்பியாசிகளுக்குச் சாதகமாகக்
குணங்குறியற்ற சுத்தப்பிரமத்திற்குச் சிறந்த லெட்சணமா
கச் சச்சிதானந்த லெட்சணங்களைப் பிரமத்தின் லெட்சண
மாகக் காட்டியும், அப்பிரமத்தில் பின்னுசத்தியான மூலப்
பிரகிருதி விகுர்த முக்குணங்களால் கற்பித்த ஜீவேசுர
ஜெகத்துக்களைக் காட்டும் 35 தத்துவங்களை ஆரோபக்
கிரமங்களால் காட்டி, அவைகளை அதிஷ்டானத்துக்கு
அன்னியமாய் ஆரோபமில்லை என்றும் அவ்வாரோபத்
திற்கு நிஜஸ்வரூபம் அதிஷ்டானமே என்னும் நியாயப்படி
அபவாதம் செய்யச் சாதகமான லயசிந்தனை காட்டியும்
இருக்கிறது. இந்த லயசிந்தனையால் பிரமஸ்வரூபத்தில்
னம் ஸ்திரப்படுகிறது. அப்போது திரிசியங்களான
ாய்யெல்லாம் பிரம சொரூபமாய் விளங்குவதால் இது
த அதிகாரிகளுக்குச் சுருதிகூறும் மோக்ஷ உபாயம்.
படி லயசிந்தனை செய்வதற்கு மேற்கண்ட ஆரோபக்
ங்கள் நூலிற் சொல்லியபடி மனதில் அழுத்தமாய்ப்
திருந்தாலொழிய லயசிந்தனை பிரமசித்தியைக் காட்
. ஆகையால் மேற்கண்ட ஆரோபங்களை நூலிற்
டியபடி மனதில் செவ்வையாய்ப் பதியச்செய்தற்குச்

சாதனமாக இந்நூலிற்கிணங்க அடியிற்கண்ட ஆரோப சித்திரப்படத்தை வரைந்து, அனேக சாதுக்கள் அதை அங்கீகரித்தமையால் அப்படத்தை இத்துடன் வெளியிடலானேன். வேதாந்தத்தில் மனது ருசித்த பிரதம அப்யாசிகளான இளம் பக்குவர்கள் நூலுடன் படம்சேர்ந்த புஸ்தகத்தை வாங்கி, அப்பியாசிப்பார்களானல் நூலின் ஞானம் அனுயாசமாய் மனதில் போதப்படும்.

இங்ஙனம்,

**உலகசுந்தரம் பிள்ளை,**

2-வது கிரேட் ரிட்டையர்டு வக்கீல்,

மதுரை.

---

காசி, ப்ரம்மஸ்ரீ

பரமானந்த சுவாமிகளின் பாதசேவைகளில் ஒருவரான

சிவானந்த சுவாமிகள் எழுதிய,

**சாற்று வேண்பா.**

---

சீரோங்கு சேஷாத் திரிசிவனுர் நூலிதற்கா
யாரோப சித்திரமொன் றுங்கமைத்தான்—பாரோங்கு
மெய்குலமு மூட்சுக்க ளீடேற ஞானவான்
தங்குலக சுந்தரமே தான்.

திருத்துருத்தி இந்திரபீடம் ஈசூர்
சச்சிதானந்த சுவாமிகள் ஆதீனம் தண்டறை பிரஹ்மஸ்ரீ
சுப்பராய ஆசாரிய சுவாமிகள் மாணவர்களில் ஒருவராகிய
மதுரை ஸ்ரீ மீனும்பிகை பிரஸ் மானேஜர்

எஸ். கந்தசாமி பிள்ளையவர்க ளியற்றிய

சாற்றுப் பாயிரம்.

**ஆசிரியம்.**

பிரமசை தன்னியம பின்னமாஞ் சத்தியொடு
பீடுறக் குலவி யாங்கு
பிரகிருதி மாயையாய்ப் பின்னுமைம் பூதமாய்ப்
பேதபுவ னுதி தோற்றம்
மரமதனுள் வித்தாயும் மற்றதனுண் மரமாயும்
மாறிநிகழ் கின்ற மித்தை
மனவிகிர்த பொறியைந் தடக்கிலது காணலாம்
வந்தணுகும் முத்தி யின்பம்
வரமிகு ஸ்ரீசேஷாத்ரி சிவனுர் மஹான் *ஜீவ
வாதகட் டளையா மிதில்
வகுத்தனர்மு மூட்சுக்கள் மன்னுபெறு மாறிந்த
மறையுணரு மதிகா ரிகள்
சிரமமற வாரோப சித்திரப் படமொன்று
தெற்றனவு மெழுதி யீந்தான்
சிற்பரநி லைகண்ட திடசித்த மெய்ஞ்ஞானி
தேறுலக சுந்தரன் மனே.

வெண்பா.

இவ்விருவர் இத்தகையர் இவ்வளவில் இவ்வுலகில்
எவ்விதத்த மேம்பா டியற்றினர்கொல்—ஒவ்வும்
இவரே இவர்க்கிணையாம் இந்நூல் பயின்முர்
அவரே அறிவா ரதை.

---

* ஜீவவாதகட்டளை - நாநாஜீவவாதக்கட்டளை

மதுரைத் தமிழ் வித்வான்

ஸ்ரீ நா. கிருஷ்ணசாமிநாயுடவர்கள் இயற்றிய

சாற்றுப் பாயிரம்.

ஆசிரியம்.

உலகநூல் அறிவுநூல் எனவிருவகைத்தவையுள்
உலகநூ லறிவ தென்றால்
உணர்வரிய பாஷைகளை யனத்தினூ உமவையவைக
ளுறுவெழுத் தறிதல் போன்று
இலகுமோ ரறிவுநூல் அறிவதென் றால்முன்னர்
எங்கள் சேஷாத்ரி சிவனார்
இயற்றுநா நாஜீவ வாதகட் டளையெனும்
இந்தநூ லறிதல் வேண்டும்
பலபல மஹாவாக்ய பிர்மசூத் திரமெலாம்
பார்க்கவும் பார்த்த வண்ணம்
பழகவும் வழிகாட்டி யாமிந்த நூற்கினிது
பகருமா ரோப சித்ர
அலகுதரு படமொன்று முதலிளம் பக்குவர்கள்
அப்பியா சித்து ணரவே
அருளிய மஹான் உலக சுந்தரம் எனிலம்ம
அவரிருவ ரவர் பெரியரே!

வெண்பா.

தத்துவந்தொன் றூற்றுறின் தன்மைநனி யாய்வார்கள்
அத்துவித மானநிலை யாவார்கள்—முத்திநிலை
தேடவரும் சேஷாத் திரிசிவனார் நூலிதனை
நாடவரும் ஞானம் நமக்கு.



ஓம்
தத்சத்
பரப்ரஹ்மணேநம:

# நாநாஜீவவாதக் கட்டளை.

---

## ஆன்மவடிவசிவம் உபாதியினாலே ஐவகையாக விளங்கலைக் கூறல்.

1. சுத்தப் பிரஹ்மமாயிருக்கின்ற சர்வசாட்சியினிடத்திலே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒரு சத்தி உண்டு. அந்தச் சத்தி அதீதப் பிரஹ்மத்தி லடங்கியிருக்கும்போது (அதற்குச்) சுத்தப்பிரஹ்மமென்று பெயர். இந்தச் சத்தி விசிரிம்பித்துச் சுத்தப் பிரஹ்மத்தை வியாபிக்கும்போது (அது) பரை வியாபகத்துக்குள் இருந்தபடியினாலே (அதற்குப்) பரப்பிரஹ்மமென்று பெயராயிற்று.

2. இலட்சண சூனியமா யிருக்கின்ற இந்தச்சத்திக்குப் பிரஹ்மத்தினுடைய சந்நிதானத்தில் புருஷசமுகத்திலே ஸ்திரீக்கு இன்பஞ் சனித்தாற்போல *அவிகிருத சத்வ ரஜஸ் தமோகுணங்களுண்டாயின. இந்தச் சுத்த சத்துவத்திற்கு ஆனந்தரூபசக்தி என்று பெயர்; சுத்த ரஜசுக்குச் சித்துரூபசக்தி என்று பெயர்; சுத்த தமஸுக்குச் சத்துரூப சத்தி என்று பெயர். இந்தக் காரணமான ஆனந்தரூப சத்தியுடனே பரப்பிரஹ்மம் கூடிச் சர்வானந்த சுழுத்தியை அடைகிறபோது (அதற்குப்) பரப்பிரஹ்ம மென்கிற

---

* அவிகிருத-வேறுபடாத.

பெயர்போய்ப் பரமானந்த ரென்கிற பெயர்வந்தது. இந்தப் பரமானந்தர் சித்துரூபசத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாச மென்கிற சொப்பனவத்தையை அடைகின்றபோது (அவருக்குப்) பரமானந்த ரென்கிற பெயர் போய்ப் பரிபூரண ரென்கிற பெயர் வந்தது. இந்தப் பரிபூரணர் சத்துரூபசத்தியுடனே கூடிச் சர்வவியாபக மென்கின்ற சாக்கிராவத்தையை அடைகின்றபோது (அவருக்குப்) பரிபூரண ரென்கிற பெயர் போய்ப் பர னென்கிற பெயர் வந்தது.

### பிரகிருதித் தோற்றமும், ஈசுவரத் தோற்றமும் கூறல்.

3. இந்த அகண்ட பரிபூரண சச்சிதானந்தப் பிரஹ்மத்தினிடத்திலே சுத்தியி விரசிதந் (கிளிஞ்சலில் வெள்ளி) தோன்றினாற்போல மூலப்பிரகிருதி என்றொரு சத்தி உண்டாயிற்று. அந்த மூலப்பிரகிருதியும் விகிருதகுணமாகிய முக்குணத்துடனே கூடியிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவகுணம் மாயை என்றும், சர்வஞ்ஞவுபாதி என்றும், ஈசுவரகாரணசரீரமென்றும் சொல்லப்படும். இந்தமாயையினிடத்திலே நிர்மலஜலப் பிரதிபிம்பம்போலப் பிரஹ்மம் சுலட்சணமாகப் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்யம் சர்வஞ்ஞனாகிய ஈசுவரனென்று சொல்லப்படும்.

### ஈசுவரன் சத்துவாதி குணங்களினால் மும்மூர்த்திகளாய் விளங்கலைக் கூறல்.

4. இந்தச் சத்துவகுண மாயையினிடத்திலே சத்துவத்திற் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்தில் தாமதம் என்று மூன்றுகுண முண்டாயின. இவற்றுள், சத்துவத்திற் சத்துவம் பிரதானமாகும் (மேற்பட்டு நிற்கும்) போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் ஜகத்தை இரட்சித்தலால் விஷ்ணு என்று சொல்லப்படும். சத்துவத்தில் இராசதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருஷ்டித்தலால் பிரஹ்மாவென்று சொல்லப்படும்; சத்துவத்தில் தாமதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தைச் சங்காரம் பண்ணுதலால் உருத்திரனென்று சொல்லப்படும். இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுண கற்பனை (அத்தியாசம் அஃதாவது பொய்த்தோற்றம்) சொல்லப்பட்டது.



### ஜீவர்களின் தோற்றமும் அவர்களின் பேதமும் கூறல்.

5. இனி, மூலப்பிரகிருதியின் இராசதகுணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து, அவித்தைகளென்றும், ஜீவகாரண சரீரங்களென்றும் ஒன்றற்கொன்றுதாரதம்மியமாக(ஏற்றக்குறைச்சலாகச்) சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலினசலப் பிரதிபிம்பம்போலப் பிரஹ்மசைதன்யம் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்யங்கள் கிஞ்சிக்ஞரென்றும், சிதாபாசரென்றும், பிராஞ்ஞரென்றுஞ் சொல்லப்படும், இந்த அவித்தைகளிடத்திலேயும் இராசதத்தில் சத்துவம்; இராசதத்தில் இராசதம், இராசதத்தில் தாமதமென்று மூன்று குணமுண்டு. இராசதத்தில் சத்துவம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் தத்துவஞான நிட்டனாவான். இராசதத்தில் இராசதம் பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக்குரோதபரனாய்க் கன்மநிஷ்டனாவான்; இராசதத்தில் தாமதம் பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்கங்களை உடையவனாவான். இப்படி மூலப்பிரகிருதியின் இராசதகுண கற்பனை சொல்லப்பட்டது.

ஆவரணத்தின் தன்மையைக் கூறல்.

6. இனி மூலப்பிரகிருதியின் தாமத குணத்திற்கு ஆவரணம் விட்சேபமென் றிரண்டு சத்திகளுண்டு. இவற்றுள், ஆவரணசத்தி என்பது தத்துவஞானியையும் ஈசுரனையுந்தவிர மற்ற ஜீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன் சாட்சிசைதன்ய மென்புவைகளை ஒன்றற்கொன்று பேதம் (வேற்றுமை) தெரியவொட்டாமல் மறைக்கும். இதனுல் மறைபட்ட ஜீவன் இருபத்தொன்பது தத்துவங்களேயும் ஒருமைப்பாடாக (ஒற்றுமையாக) நானென்று அபிமானிப்பன். இந்த அபிமானம் அகங்காரக் கிரந்தி என்றும், சம்சாரபந்தமென்றும் சொல்லப்படும். சற்குரு கடாட்சத்தினுலே இந்த ஆவரணம் நீங்கி, இருபத்தொன்பது தத்துவத்திற்கும் ஒன்றற்கொன்று பேதந் தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரண சத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

விட்சேபத்தின் தன்மையைக் கூறல்.

7. இனி விட்சேபத்தினிடத்திலும் சத்ததன்மாத்திரையான ஆகாசம் பிறந்தது; ஆகாசத்திலும் பரிச தன்மாத்திரையான வாயு பிறந்தது; வாயுவிலும் ரூபதன் மாத்திரையான அக்கினி பிறந்தது, அக்கினியிலும் ரச தன்மாத்திரையான அப்புப் பிறந்தது, அப்புவிலும் கந்த தன்மாத்திரையான பிருதிவி பிறந்தது. இந்தச் சூட்சும பஞ்சபூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விட்சேப சத்தியினிடத்திலே தாமதத்தில் சத்துவம், தாமதத்தில் இராசதம், தாமதத்தில் தாமதமென்று அற்பங் கருவிருந்த படியினுலே அதன் காரியமாம் இந்தத் தன்மாத்திரையான பஞ்ச பூதங்களும் முக்குணத்துடனே பிறந்தன. இந்தப் பஞ்சபூதங்கள் தன்மாத்திரைகளென்றும், அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூட்சும பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும், சாத்திரங்களிலே சொல்லப்படும்.



அந்தக்கரணத்தின் தன்மையைக் கூறல்.

8. இந்தச் சூட்சும பூதங்களினின்று சூட்சும சரீரங்களும், தூலபூதங்களும் பிறந்தன. அஃதெங்ஙன மென்னில் ஆகாச முதலான பஞ்சபூதங்களினுடைய சாத்விகாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றுகக் கூட்டி வைத்தது அந்தக்கரணமாம்.

இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தின் அம்சங் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போற் சகலமான கேள்விக்கும் இடங் கொடுத்துத் தரிக்கின்றது; இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் வாயுவின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனமென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அக்கினியின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல இஃது இன்னதென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தி என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அப்புவின் அம்சங் கூடினதற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போல விஷயங்களில் பற்றி இழுக்கின்றது; இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்த மென்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் பிருதிவியின் அம்சங் கூடின தற்கு அடையாளம்; இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப் போலக் கடினமாக நின்று நானென்று அபிமானிக்கின்றது; இப்படி அபிமானிக்கின்ற விருத்திக்கு அகங்கார மென்று பெயர்.

ஞானேந்திரியத்தின் தன்மையைக் கூறல்.

9. இன்னும் ஆகாச முதலிய பஞ்சபூதங்களினுடைய சாத்விகாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரிய மென்று சொல்லப்படும்.

இவற்றுள் சுரோத்திரம் ஆகாசத்தின் அம்சமானபடியினலே ஆகாசத்தின் குணமான சப்தமாத்திரத்தையறியும்.

துவக்கு வாயுவின் அம்சமானபடியினலே வாயுவின் குணமான பரிசமாத்திரத்தை யறியும்.

சட்சு அக்கினியின் அம்சமானபடியினலே அக்கினியின் குணமான ரூபமாத்திரத்தை யறியும்.

சிங்ஙுவை அப்புவின் அம்சமானபடியினலே அப்புவின் குணமான ரசமாத்திரத்தை அறியும்.

ஆக்கிராணம் பிருதிவியின் அம்சமானபடியினலே பிருதிவியின் குணமான கந்தமாத்திரத்தை யறியும்.

இப்படி ஐந்தும் ஒன்ருேடொன்று கூடாதபடியினலே ஒன்று மற்ருென்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக்கரணத்தில் ஐந்து மாத்திரையு மொன்ருய்க் கூடினது கொண்டு அஃது ஐந்திந்திரியத்தினலும் ஐந்து விஷயத்தையும் அறியும். இந்தச் சத்துவகுணத்தி லுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப் பத்தும் சாத்விக அம்சமானபடியினலே ஞானசாதனமாயின.



பிராணுதிவாயுவின் தன்மையைக் கூறல்.

10. இன்னும் ஐந்து பூதத்தினுடைய இராஜதாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்ருகக் கூட்டிவைத்தது வியானுதி பஞ்சவாயுக்களாம்.

இவற்றுள், வியானவாயு ஆகாசத்தின் அம்சமானபடியினலே ஆகாசத்தைப்போல் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

பிராணவாயு வாயுவின் அம்சமானபடியினலே வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசியாதி பரியந்தம் அலையும்.

அபானவாயு அக்கினியின் அம்சமானபடியினலே அக்கினியைப்போல் சாடராக்கினியாக உஷ்ணித்துக் கொண்டு குதத்தைப்பற்றி நின்று, உண்ட அன்னபானுதிகளை ஜீரணிப்பிக்கும்.

சமானவாயு அப்புவின் அம்சமானபடியினலே சரீர நடுவான நாபித்தானத்தில் நின்று, உண்ட அன்னபானுதி ரசங்களைச் சகல நாடிகளிலும் அப்புவைப்போல் இழுக்கும்.

உதானவாயு பிருதிவியின் அம்சமானபடியினலே கண்டத்தைப்பற்றிப் பிருதிவியைப்போல கடினமாக நின்று உண்ட அன்னபானுதிகளைக் கடையும்.

இந்தப் பஞ்ச வாயுக்களையுமன்றி வாந்திபண்ணி வைக்கின்றவன் நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றவன் கூர்மனென்றும், குறுகுறுத்துத்தும்மச்செய்கின்றவன் கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளச்செய்கின்றவன் தேவதத்தனென்றும், வீங்குவிக்கின்றவன் தனஞ்சயனென்றும் வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவர்.

இந்த ஐந்தும் பிராணனுடைய தொழிலானபடியினலே வேறல்ல.

### கன்மேந்திரியத்தின் தன்மையைக் கூறல்.

11. இன்னும் ஆகாசமுதற் பஞ்சபூதங்களினுடைய இராஜதாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கன்மேந்திரியுமென்று சொல்லப்படும்.

இவற்றுள், ஆகாசத்தினிடமாக வாக்கு வசனிக்கும்; வாயுவினிடமாகப் பாணி இடுதல் ஏற்றல் செய்யும்; அக்கினியினிடமாகப் பாதம் நடக்கும்; அப்புவினிடமாகப் பாயுரு மல சலாதிகளை வெளியிலே தள்ளும்; பிருதிவியினிடமாக உபத்தம் சுகத்தைப் பண்ணும்.

இவ்வைந்தும் தனித்தனியே இருத்தலால் வேறு தொழில் செய்யமாட்டா. வியானுதி வாயுக்கள் ஐந்து மாத்திரையு மொன்ருய்க் கூடினது கொண்டு கன்மேந்திரியம் ஐந்தின் வழியினுலும் ஐந்து தொழில்களையுஞ்செய்து முடிக்கும். இந்த வாயுக்க ளைந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகப்பத்தும் இராசதாம்சமான 'படியினல் கிரியா சாதன மாயின.

### சூட்சுமசரீரத்தின் தன்மையைக் கூறல்.

12. அந்தக்கரணம் ரு-ம், ஞானேந்திரியம் ரு-ம், வாயுக்கள் ரு-ம், கன்மேந்திரியம் ரு-ம் ஆக உ௦ தத்துவமும் சூட்சுமசரீர மென்று சொல்லப்படும். இந்தச் சூட்சும சரீரம் மாயாப் பிரதிபிம்பனுன ஈசுவரனல் அவித்தையாப் பிரதி பிம்பரா யிருக்கின்ற சீவர்கள் அனேகராகையால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்ருகச் சிருட்டித்துக் கொடுக்கப்பட்டது. அப்போது பஞ்சபூதங்



களின் சாத்விகாம்சமும், இராசதாம்சமும் செலவழிந்தன; தாமதகுண மாத்திரம் சேடித்தது. இப்படி சூட்சும சரீர கற்பனை சொல்லப்பட்டது.

### தூலபூதத்தின் தன்மையைக் கூறல்.

13. இனித் தூலபூத உற்பத்தி சொல்லுகிருேம். அஃதெங்ஙனமெனின்:—மிஞ்சின தமோம்சமாயிருக்கின்ற ஐந்து பூதங்களுள் ஒவ்வொன்றையும் இரண்டாகப்பகுத்து, முதற்பாதி ஐந்தனுள் ஒவ்வொன்றையும் நந்நான்காகப் பகுத்து, இரண்டாம் பாதி ஐந்தனுள் தன் அம்சத் (பாகம்) துடனே கூட்டாமல் மற்ற நான்கு பூதத்துடனும் அரைக் கால் அரைக்கால் மாத்திரையாகக் (எண்ணில் லெட்டிலொரு பாகம்) கொடுக்கின்றது பஞ்சீகரணமென்று சொல்லப்படும்



இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிச ரூப ரச கந்தமாகிய நான்கு குணமும் வியாப்பியமான (வெளிப்படாதடங்கி யிருக்கின்ற) படியினல் அதிருசியமாய்ப் (இந்திரியத்திற்கு விஷயமாகாது) போக நிஜகுணமாகிய சப்தமும், வாயுவிலே ரூப ரச கந்தமாகிய மூன்றுகுணமும் வியாப்பியமானபடியினல் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சப்தமும் நிஜகுணமாகிய பரிசமும், அக்கினியிலே ரச கந்தமாகிய இரண்டு குணமும் வியாப்பியமான படியினல் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சப்த பரிசமும் நிஜ குணமாகிய ரூபமும், அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியினல் அதிருசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சப்த பரிச ரூபமும் நிஜகுணமாகிய ரசமும், பிருதி

வியிலே காரணகுணமாகிய சப்த பரிச ரூப ரசமும் நிஜ குணமாகிய கந்தமும் தோன்றின.

## தூலசரீரத்தின் தன்மையைக் கூறல்.

14. சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்கள் பிறந்தாப்போலப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களினின்றும் ஆறு தத்துவமாய் நால்வகைப் பிறப்பாய் மூவகைச் சாதியா யிருக்கின்ற தூலசரீரங்கள் பிறந்தன.

15. இவற்றுள், ஆறுதத்துவமாவன எவை எனில்: சர்மம், உதிரம், மாமிசம், சநாயு, அத்தி, மச்சை என்பனவாம்.

நால்வகைத் தோற்றமாவன எவை எனில்:—சராயுசம், அண்டசம், சுவேதசம், உத்பிசம் என்பனவாம்.

மூவகைச் சாதியாவன எவை எனின்:—இகலோக பரலோக புத்தி (இவ்வுலகத்தி னியல்பையும் சுவர்க்கத்தி னியல்பையும் ஆராய்ந்தறியும் மனவுணர்ச்சி) இருவகையுங் கொடுக்கின்ற மாநுடசரீரம் உத்தமஜாதி. பரலோக புத்தியை மறைத்து இகலோக புத்தியை மாத்திரங் கொடுக்கின்ற பசு பட்சி முதலானவை மத்திமஜாதி. இவ்விரண்டு லோகத்துப் புத்தியையும் மறைத்திருக்கின்ற மரங் கொடி செடி முதலியன அதமஜாதி. இப்படிப்பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு, அக்கினி வாயு, ஆகாச மெனப்பட்ட தத்துவங்களிலும் நிரை நிரையே (முறை முறையே) இருக்கின்ற பிதிர்லோக, தெய்வ லோக, யட்சகந்தருவலோக, சித்தர் லோகங்களிற் றோன்றுகிற நட்சத்திரம் சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர், சித்தர் என்னப்பட்டவர்களெல்லாம் உத்தமஜாதி, காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன் முதலாயின மத்திமஜாதி. கற்பகவிருட்சம், பாரிசாத முதலியன அதமஜாதி.



## கோசத்தின் தன்மையைக் கூறல்.

16. இந்தத் தூலசரீரமே அன்னமய கோசமாம். சூட்சுமசரீரம் மூன்று கோசமாயிருக்கும். அஃதெங்ஙனமெனின்:—பிராணவாயுவுங் கன்மேந்திரியமுங் கூடிப் பிராணமயகோசமாம். மனமும் ஞானேந்திரியமுங் கூடி மனோமயகோசமாம். புத்தியும் ஞானேந்திரியமுங் கூடி விஞ்ஞானமயகோசமாம். காரண சரீரமே ஆனந்தமயகோசமாம். இப்படிப் பஞ்சகோசஞ் சொல்லப்பட்டன.

## தூலசரீரத்தில் சூக்குமசரீரமிருக்கும் வகையைக்கூறல்.

17. ஆறுதத்துவமா யிருக்கின்ற தூலசரீரத்திலே இருபது தத்துவமா யிருக்கின்ற சூட்சுமசரீர மிருக்கின்றதெப்படியெனின்:—

கன்மேந்திரியங்களுள் வாக்கும் ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும் வாயிலிருக்கும்; வாயுக்களுள் உதான வாயுவும் அந்தக்கரணத்துள் மனமும் கண்டத்திலிருக்கும்; பிராணவாயுவும் புத்தியும் இருதயத்தி லிருக்கும்; சமான வாயுவும் சித்தமும் நாபியிலிருக்கும்; அபானவாயுவும் பாயுருவுங் குதத்திலிருக்கும்; வியானவாயுவும் துவக்கும் அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்; உச்சியிலே உள்ளமும், கருவிழிநுனியிலே சட்சு இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்திர இந்திரியமும், மூக்கு நுனியிலே ஆக்கிராண இந்திரியமும் கழுத்துக்குமேல் தனித்தனியே இருக்கும். கழுத்துக்குக் கீழே கை கால் குய்யங்களில் பாணி பாதம் உபஸ்தமென்னு மூன்றுந் தனித்தனியே இருக்கும். இப்படி ஸ்தூலசரீர தத்துவம் கூ-ம், அதிற் குடி

புகுந்த சூட்சுமசரீர தத்துவம் உ0-ம் ஆகத் தத்துவம் உகூ-ம் பஞ்சபூதத்தின் காரியமானபடியினாலே ஒருமைப் பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

ஜீவபரியாய நாமமும் பிரஹ்மபரியாய நாமமுங் கூறல்.

18. காரண சரீரத்தோடு சிதாபாசன் ஜாக்கிரத்திலே இந்த (தூலசரீரதத்துவம் ஆறு. சூக்குமசரீரதத்துவம் இருபது) இருபத்தாறு தத்துவத்துடனே கலந்துநின்றபோது விசுவனென்றும் வியவகாரிக ஜீவனென்றும் சொல்லப்படும்.

சொப்பனத்திலே தூலசரீரத்தைக் கைவிட்டு அந்தக்கரணத்துடனே கூடிநின்றபோது தைஜதனென்றும் பிராதிபாசிக ஜீவனென்றும் சொப்பன கற்பிதனென்றுஞ் சொல்லப்படும்.

சுழுத்தியிலே காரியசரீரதத்துவம் இருபத்தாறையுங் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி இருக்கும்போது பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திக ஜீவனென்றும் சொல்லப்படும்.

பிரஹ்மசைதன்னியம் ஜாக்கிரத்திற்குச் சாட்சியா யிருக்கும்போது ஜீவாத்மாவென்றும், சொப்பனத்திற்குச் சாட்சியா யிருக்கும்போது அந்தராத்மாவென்றும், சுழுத்திக்குச் சாட்சியா யிருக்கும்போது பரமாத்மாவென்றும், அவஸ்தாத்திரய (ஜாக்கிர சொப்பன சுழுத்தியென்னு மூன்றற்கும்) சாட்சியா யிருக்கும்போது ஞானாத்மா என்றும், கூடஸ்தன் என்றும் சொல்லப்படும்.

இப்படி ஜீவனுக்கு மூன்று சரீரமும், மூன்றவஸ்தையுஞ் சொல்லப்பட்டன.



ஈசுவரனது சரீராதிகளைக் கூறல்.

19. இனி ஈசுவரனுக்கு (ஸ்தூல சூட்சும காரணமென்னும்) மூன்று சரீரமும், (ஜாக்கிர சொப்பன சுழுத்தி என்னும்) மூன்றவஸ்தையும் சொல்லப் படுகின்றன. லோககற்பனையா (உலகவியவகாரமா) கத் தோற்றுகின்ற ஸ்தூல பஞ்சபூதங்களும் அவற்றில் தோன்றின மூன்று ஜாதியாயிருக்கின்ற ஸ்தூலசரீர சமஷ்டியுங் கூடியது ஈசுவர ஸ்தூலசரீரமென்றும் விராட்டென்றுஞ் சொல்லப்படும்.

இதனு (ஸ்தூலசரீரத்து) டனே கூடி ஜாக்கிராவஸ்தையைப் பொருந்தி இருக்கின்ற ஈசுவரன் வைசுவானரனென்றும், இந்த இருவகைக்கும் (ஸ்தூலசரீர சமஷ்டிக்கும் ஜாக்கிராவஸ்தைக்கும்) அதிஷ்டானமா யிருக்கின்ற சைதன்யம் பிரஹ்மாவென்றுஞ் சொல்லப்படும்.

சூட்சும பூதங்களைந்தும் அவற்றில் தோன்றின சூட்சம சரீர சமஷ்டியும் கூடியது ஈசுவரசூட்சும சரீரமென்றும் இரணியகர்ப்பனென்றும் சொல்லப்படும்.

இத (சூட்சும சரீரத்தி) னுடனேகூடிச் சொப்பனாவஸ்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசுவரன் சூத்திராத்மாவென்றும், இந்த இருவகைக்கும் (சூட்சும சரீரத்திற்கும் சொப்பனாவஸ்தைக்கும்) அதிஷ்டானமா யிருக்கின்ற சைதன்யம் விஷ்ணு (வியாபகமா யிருப்பவன்) என்றுஞ் சொல்லப்படும்.

இந்த ஸ்தூல சூட்சும மிரண்டின் வாசனை (ஸ்தூல சூட்சும பூதங்களை வெளிப்படுத்தற்குரிய காரணத்தன்மை) யுடனே கூடிய மாயை ஈசுவர காரணசரீரமென்றும், அவ்வியாகிருத மென்றுஞ் சொல்லப்படும்.

இத (காரணசரீரத்தி) னுடனே கூடிச் சுழுத்தியவஸ்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசுவரன் அந்தரியாமி என்றும், இந்த இருவகைக்கும் (காரண சரீரத்திற்கும் சுழுத்தி யவஸ்தைக்கும்) அதிஷ்டானமாய் இருக்கின்ற சைதன்யம் உருத்திர (சம்சாரரோகத்தை யொழிப்பவ) னென்றுஞ் சொல்லப்படும்.

ஜீவன் தன் மூன்றவஸ்தையிலுந் தன் மூன்று சரீரமாய் இருக்கின்ற இருபத்தேழு (தூலசரீரதத்துவம் 6, சூட்சுமசரீர தத்துவம் 20, காரணசரீரதத்துவம் 1, ஆக 27) தத்துவத்துடனும் நானென்று கலந்து நிற்கின்றாப்போல ஈசுவரனுந் தன் மூன்றவஸ்தையிலும் தன் மூன்று சரீரமாயிருக்கின்ற முப்பத்திரண்டு (சமஷ்டி ஸ்தூலசரீரதத்துவம் 6, சமஷ்டி சூட்சுமசரீரதத்துவம் 20, இவற்றின் வாசனையுடன் கூடிய காரண சரீரமான மாயை 1, ஆகாயாதி பூதங்கள் 5, ஆக 32) தத்துவத்துடனும் கலந்து நிற்பன்.

ஜீவசேதன முதலியவற்றின் வியாபகத்தைக் கூறல்.

20. ஆகையினால், சிதாபாசன் தன் சரீரமாத்திரமே கலந்து நிற்பன்.

ஈசுவரன் தன்னுடைய சரீரமாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பன். இந்த இருவகைக்கும் (சிதாபாசனுக்கும் ஈஸ்வரனுக்கும்) சாட்சியாயிருக்கின்ற பிரஹ்மசைதன்யம் சகல சரீரத்திலும் சகல பிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து (மீறி) எல்லையற்றிருக்கும்.

தத்துவ வியவகாரங்களைக் கூறல்.

21. ஜீவனுக்கு ஸ்தூலசரீர வியவகாரத்திற்கு அன்னமயமான சட்கோசதத்துவம் 6; சூட்சும சரீரதத்துவம் 20?



ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம்-5; ஆகத் தத்துவம் 31.

சூட்சுமசரீர வியவகாரத்திற்குச் சூட்சுமசரீரதத்துவம் 20; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம்-5; ஆகத் தத்துவம் 25.

காரணசரீர வியவகாரத்திற்கு ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம் 5.

ஜீவ வியவகாரத்திற்கு ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம் ஆகத் தத்துவம் 3.

சாட்சி வியவகாரத்திற்குச் சாட்சி 1. ஈசுவரனுக்கு ஸ்தூலசரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி அன்னமயகோச தத்துவம் 6; சமஷ்டி சூட்சும சரீரதத்துவம் 20; சமஷ்டி ஜீவன், அவித்தை 2; ஈசுவரன், வித்தை, பிரஹ்மம்-3; ஸ்தூலபூதம் 5; ஆகத் தத்துவம் 36. சூட்சுமசரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி சூட்சும சரீரதத்துவம் 20; சமஷ்டி ஜீவன், அவித்தை-2; சூட்சுமபூதம் 5; ஈசுவரன், வித்தை, பிரஹ்மம்-3; ஆகத் தத்துவம் 30.

காரணசரீர வியவகாரத்திற்கு ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம் 3.

ஈசுவர வியவகாரத்திற்கு ஈசுவரன், பிரஹ்மம்-2.

பரஹ்ம வியவகாரத்திற்கு பிரஹ்மம் 1.

இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம் 1; சட்கோச தத்துவம் 6; அந்தக்கரணம் 5; வாயு 5; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ஆக 5; ஆகத் தத்துவம் 22.

மனோராச்சிய (மனைவியர்பார) வியவகாரத்திற்கு (உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும்) அந்தக்கரணம் 5; ஜீவன் ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ஆக 5; ஆகத் தத்துவம் 10.

இப்படித் தத்துவங்களின் தோற்றமும் (சிருஷ்டியும்) நிலையும் (ஸ்திதியும்) சொல்லப்பட்டன.

## தத்துவங்களின் லயக்கிரமங் கூறல்,

22. இனித் தத்துவங்க ளொடுங்கும் (தத்தங் காரணங்களுள் அடங்குகின்ற) வழி சொல்லுகின்றோம். அஃதெங்ஙனமெனின்:—

சகல ஜீவர்களிடத்திலு மிருக்கின்ற ஸ்தூல சரீரங்களனைத்தும் தமக்காதாரமான ஸ்தூலபூதங்களிலே மடிந்து (முன்னிலைமை விட்டு) பூதமாத்திரமாய் ஒடுங்கும். இந்த ஸ்தூலபூதங்களும் பஞ்சீகரணம் (கலப்பு) விட்டுத் தன்மாத்திரையான (சூட்சுமமான தமோகுண பூதங்களாய் மிஞ்சும். அப்போது கேவலம் இரணியகர்ப்பாவஸ்தை (சூட்சும பூதங்களா யிருக்கும் நிலை) என்று சொல்லப்படும். சூட்சும சரீர தத்துவங்கள் இருபதுங் கட்டு (நிலை) விட்டுப் பூதங்களினுடைய சத்துவகுணமும் இரஜோகுணமுமாய் ஒடுங்கும். அஃதெங்ஙனமெனின்:—

சகல பிராணிகளிடத்திலு மிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதானனும், உபத்தமும் பிருதிவியிலொடுங்கும். சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும் அப்புவி லொடுங்கும். புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும் அக்கினியி லொடுங்கும். மனதும் துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவி லொடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தி



லொடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாம். இந்தச் சூட்சும பூதங்களுள், பிருதிவி அப்புவிற் கரைந் தொடுங்கும். அப்புவும் அக்கினியிற் சுவறி (வற்றி) ஒடுங்கும். விளக்குப்போல அக்கினியும் வாயுவி லணைந் தொடுங்கும். வாயுவும் ஆகாசத்தி லோய்ந் தொடுங்கும். ஆகாசமும் விட்சேபசத்தியி லொடுங்கும். ஆவரண சத்தியும் விட்சேப சத்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய் ஆலமரம் ஆலவித்தி லொடுங்கினாற்போல் இன்னுமொருசிருட்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும். அந்த மாயையும் அவித்தையும் அதி நுண்மையான (மிகவும் சூட்சுமமான) மூலப்பிரகிருதி என்று சொல்லப்படும் விந்துதத்துவத்தி லொடுங்கும். அந்த விந்துவும் பாம்பென்கிறபெயர் போய்ப் பழுதையாய் (கயிறாய்)க் கண்டாற்போலத் தனக்கதிட்டானமான பிரஹ்மசைதன்ய மாத்திரமாய் ஒடுங்கும். இப்படிப் பொய் எல்லாம் (தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம்) மெய்ப்பொருளொன்றாகக் கண்டு அதுவே சுபாவசித்தமாய் (நிசமாய்) இருக்கின்ற தன் வடிவென (தனது நிஜவடிவென) க் கண்டு தெளிந்து கவலை (தேகாதிப் பிரபஞ்சத்தா லுண்டாகின்ற வருத்தம்) கெட்டிருக்கின்றவனே ஜீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

## தத்துவ வகையைக் கூறல்.

23. இப்படித் தோன்றி ஒடுங்குகின்ற தத்துவம் 36. அஃதெங்ஙனெனின்:—பூதம் 5, ஸ்தூலசரீர தத்துவம் 6, சூட்சுமசரீரதத்துவம் 20, காரணசரீரமான மாயை அவித்தை 2, இவற்றிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் ஜீவன் 2, இவற்றிற்கெல்லாம் அதிட்டான சைதன்னியமா யிருக்கின்ற பிரஹ்மம் 1, ஆகத் தத்துவம் 36.

## போதுத்தத்துவ மின்னதென்றும் சிறப்புத்தத்துவ மின்னதென்றும் கூறல்.

24. இவற்றுள்: பூதம் 5, மாயை 1, மாயாப் பிரதிபிம்பரான ஈசுவரன் 1, பிரஹ்மம் 1, ஆக இந்த எட்டும் சகல பிராணிகளாலும் சமுதாயமாக (பொதுவாக) அநுபவிக்கப்படும். ஏனைய இருபத்தெட்டும் அந்தந்தப் பிராணிகளாய் பிரதக்காக (வெவ்வேறாக) அநுபவிக்கப்படும். அஃதெங்ஙனெனின்:—பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் யாவருக்கும் ஆகாரமில்லை; மழை மறுக்கில் யாவருக்குஞ் சலமில்லை; தேயுவில்லாதிருந்தால் பாகம் (உணவுப்பொருள்கள் உண்ணுதற்குப் பக்குவமாதல்) இல்லை; வாயுவியக்கமில்லாவிட்டால் வாடை (வாடைக்காற்று) தென்றல் (தென்றற்காற்று) இல்லை; ஆகாச மிறக்கில் ஒருவருக்கும் அவகாச (இட) மில்லை. மாயையும் மாயாப்பிரதிபிம்பரு மிறக்கிற் சகல சமயத்திற்குந் தெய்வ மில்லை; பிரஹ்ம மில்லையாயின் ஒருவருக்கும் அறிவில்லை. ஆகையால் இந்த எட்டும் எல்லாருக்குஞ் சமுதாயமாம். பிரதக் கெங்ஙனெனின் (தனித்தனியா யநுபவித்தற் குரியவை என்பது எப்படி என்றால்):—ஒருவனுக்கு ஸ்தூலசரீர மிறக்கில் யாவருக்கும் ஸ்தூலசரீரம் இறவாதபடியினாலும், சூட்சும சரீரத்தி லொருவனுக்கு அங்கவைகல்லியம் (உறுப்புக்குறைவு) வந்தால் யாவருக்கும் வராதபடியினாலும், முத்தராயிருக்கின்ற சுகர் வாமதேவர் முதலானோருக்கு அவித்தையும் ஜீவனு மிறந்துபோயிருக்க மற்றையோருக் கெல்லாம் அவித்தையும் ஜீவனு மிறவாதபடியினாலும், இந்த இருபத்தெட்டுத் தத்துவமும் ஒவ்வொருவனுக்கும் பிரதக் (தனித்தனியனுபவம்) கென்பதிற் சந்தேகமே இல்லை.



## முப்பத்தாறுந் தத்துவம் ஆத்மவடிவ சிவம் என்பதை விளங்கக் கூறல்.

25. இந்தத் தத்துவம் முப்பத்தாறனுள், எப்போதுந் தானாகவே காணப்படுகிற தத்துவம் 1, எப்போதுந் தனக் கன்னியமாகவே காணப்படுகிற தத்துவம் 7, தானாகவும் தனக்கு அன்னியமாகவும் அநுபவிக்கப்படுகிற தத்துவம் 28. அஃதெங்ஙனெனின்:—அவஸ்தாத்திரய சாட்சியாயிருக்கின்ற பிரஹ்மசைதன்னியம் எல்லா அவஸ்தைகளிலும் தானாகவே விளங்குகையினாலும் மற்ற தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாக விளங்காமையினாலும் பிரஹ்மசைதன்ய மொன்றுமே தானாய் இருக்கின்றது. பஞ்சபூதம், மாயை, மாயாப் பிரதிபிம்பரென்னு மிவ்வேழின் தொழிலான வெட்டு, குத்து, உழவு, (ஈசுவரனுடைய கிருத்தியமான) பஞ்சகிருத்தியம், தசாவதார முதலானவை ஒருகாலுந் தன்னுடைய தொழில்களாகக் காணப்படாமையின் இந்த எழு தத்துவமுந் தனக்கு அன்னியமே அல்லாமல் தானாகமாட்டா. மற்ற இருபத்தெட்டுத் தத்துவங்களுள், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரஹ்மசாரி (ஆசிரியனிடத்தோதி விரதங்காத்து விவாகமின்றி யிருப்பவன்), நான் கிருகஸ்தன், (இல்லறத்தில் வழுவாது மனையாளோடு கூடி வாழ்பவன்) நான் வானப்பிரஸ்தன், (இல்லறத்தை விட்டு மனையாளோடாயினும் தனித்தாயினும் வனத்திற் சென்று தவஞ் செய்பவன்) நான் சந்நியாசி, (முற்றத் துறந்தவன்) நான் ஆண், நான் பெண், நான் கரியன், நான் சிகப்பன், நான் கட்டையன், நான் நெட்டையன், நான் பருத்தேன், நான் இளைத்தேனென்று தானாக வழங்குகின்ற ஸ்தூல சரீரமாகிய ஆறு தத்துவமும் மற்றொரு வேளையிலே தனக்குப்

புறம்பு (வேறு) பட்டு என் மாடு என் கன்றென்றாற்போல் என் சரீரம் பருத்தது, என் சரீரம் இளைத்தது, என் மயிர் நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாள் ஆயிற்று என்று தான் வேறு ஸ்தூலசரீரம் வேறாக வழங்குகின்ற படியினாலும், நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன். கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத் திற்கு (கருப்பிற்கு) ஜீவித்தேனென்று தானாக வழங்கு கின்ற சூட்சுமசரீர தத்துவம் இருபதும்; மற்றொரு வேளை யிலே தனக்குப் புறம்புபட்டு என்வீடு, என்னுடைமை என் றாற்போல் என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என்கை, என் கால், என் மனம், என் புத்தி, என் அகங்கா ரம், என் சித்தம், என் பிராணனென்று தான் வேறு அவை வேறாக வழங்குகின்றபடியினாலும், நான் அறியேன் அறி வேனென்று தானாக வழங்குகின்ற அஞ்ஞானமுஞ் சிதா பாசனும்; மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என் அஞ்ஞானம்; என் ஜீவனென்று வழங்குகின்றபடியி னாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவமும் தானாகவும் தனக்கு அன்னியமாகவும் வழங்கப்படுதல் சித்தம். இப் படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சிஷ்யன் கேட்கும் படி (விநயபூர்வகமாய்க் கேட்பதாவது) சுவாமி! இந்த இருபத்தெட்டுத் தத்துவமுந் தானுஞ் சாட்சியைப்போல ஒரு தன்மையாகத் தோற்றவேண்டுமே அல்லாமற் பஞ்ச பூதத்தைப்போலத் தனக்கன்னியமாகக் காணக் கணக் கி (காரணமி) ல்லை. இந்த இருபத்தெட்டுந் தனக்கன்னியமே யான லெப்போதும் புறம்புபட்டே யிருக்கவேண்டு மல் லாமல் தானாக வழங்கக் கணக்கில்லை. அவை தானுமாய்த் தனக்கு அன்னியமுமா யிருக்குமென்பது இருட்டாதித்த



(இருட்டு வடிவ சூரிய) னென்றாற்போல் விருத்தமா மென் கிற சங்கைக்கு (ஆட்சேபத்திற்கு)க் குரு சொல்லுகிறார். பரமார்த்தமா (உண்மையா) கத் தானென்கிற தொருவ கையும் அத்தியாசத்தி (மயக்கத்தி) னாலே தானென்கின்ற தொருவகையும் ஆக இருவகையுமுண்டு. சாட்சி சைதன் னியத்தைத் தானென்கின்றது பரமார்த்தமல்லாமல் உப சாரமல்ல. தனக் கன்னியமா யிருக்கின்ற இந்த இருபத் தெட்டையுந் தானென்கின்றது கட்டையைக் கள்ளனென் றாற்போலவும் பழுதையைப் பாம்பென்றாற்போலவும், புத் திர தாராதிகளைத் (பிள்ளை பெண்சாதி முதலானவர்களை) தானென்றாற் போலவும் மயக்கமே அல்லாமல் உண்மை அல்ல; ஆகையினால் அஞ்ஞானகாலந் தொடங்கித் தானல் லவென்று காணப்பட்ட தத்துவம் 7. இப்போது இப் படிப்பட்ட விவேகம் பண்ணின பிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவம் 28. ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் அதற்குச் சொன்ன குணங் குறிக (சிறப்பியலென்னு மடையாளங்க) ளுடனே கூடக் காண் கின்ற அறிவு கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே இருந்து கடத்தைப் பார்க்கின்றதுபோல இந்த முப்பத்தைந்து தத்துவத்தையுங் காண்கின்ற முப் பத்தாறுந் தத்துவமாகிய பேரறிவென்றுணர்ந்து அது தா னென்றறிந்து (தனது எதார்த்த வடிவமென் றுள்ளவாறு நிர்விகற்ப சமாதி வாயிலாய் அறிந்து) அது தானே பிரஹ்ம மென்று தெளிந்தவனே பிரஹ்ம தரிசனமுடைய ஜீவன் முத்தனென்று சொல்லப்படும்.

## பந்த மோட்சங்களின் காரணத்தைக் கூறல்.

26. இப்படிப் பிரஹ்மமே தானென்றும், ஏனைய முப் பத்தைந்து தத்துவங்களுந் தனக் கன்னியமென்றும் பிரித்

தறியாத அவிவேகி (ஆத்மாநாத்ம விவேக மில்லாதமூடன்) அகங்காரக் கிரந்தியினலே புத்திர தாராதிகள் தவிக்கின் றதை யான் தவிக்கின்றே னென்னும் மூடத்தனம்போல் இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையுந் தன் தொழி லென்று மயங்குகின்றபடியினல், இந்த இருபத்தெட்டினு லும் ஆர்ச்சிக்கப்பட்ட (சம்பாதிக்கப்பட்ட) புண்ணிய பாவங்களினுற் கட்டுப்பட்டு, அந்தக் கன்மத்தின்படியே ஜனன மரணுதி சம்சாரத்திலே அடிபடுகிறேனென்று மயங்குவன். பிரஹ்ம சைதன்னியமே தானென்றும் மற்ற முப்பத்தைந்தும் தானல்லவென்றுந் தெளிந்த விவேகியான வன் அகங்காரக் கிரந்தியற்றபடியினல் இந்த இருபத்தெட்டி னுடைய தொழிலையும் நான் செய்யவில்லை என்றும், இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை என் றும், திடப்படத் தேறி மயக்கமற் றிருக்கின்றபடியினல் இந்த இருபத்தெட்டினுலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்ம மில்லாதபடியினல் ஜனனமரணுதி சம்சாரமில்லாமல் முத்தனுகிப் பிரஹ்மமாத் திரமாகவே இருப்பன். இவனை ஜீவன்முத்த னென்றும், திடப்பிரஞ்ஞனென்றும், அதிவர்ணுச்சிரமியென்றும், குணு தீதனென்றும், பகவத் பக்தனென்றும், பிராமணனென் றும் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. யாவரும் இந்தத் தத்துவத்தை விசாரம் பண்ணி மோக்ஷ மடையக்கடவர்.

நாநாஜீவவாதக்கட்டளை

முற்றிற்று.




விவேக சட்கம்.

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்போற்
பரப்பிர மத்திடை யதனிற்
கழிதரு மஞ்ஞா னத்தினுற் சீவ
னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனுற் சர்ப்பமோகமும்போய்ப்
பழுதையாய்க் கண்டது போல
வழுவில்தே சிகனுர் சீவனீ யன்றென்
றறைந்திட வாகினேன் சிவோகம். (4)

எமக்குமன் னியமா முலகமொ ன்றில்லை
யெவ்வுல கங்களெம் மிடத்திற்
சமித்துவுற் பவமா மாதலான் மாயை
வடிவம தேதெனிற் சாற்ற
வமைத்தகண் ணுடிவிம் பமா நிழல்போல்
அடங்கியெம் மிடத்தினில் விளங்குந்
தமத்துவ மில்லாச் சச்சிதா னந்த
தற்பத விமலமாஞ் சிவோகம். (5)

சாக்கிர மதனி லிந்திரியங்கள்
தமக்குமேற் சாட்சியாஞ் சிவோகம்
தேக்குசொப் பனத்தி லுலகளு பமதாய்ச்
செய்மனச் சாட்சியாஞ் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி
யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம்
நீக்கமில் துரியா னந்தமாஞ் சர்வ
நிர்மல சாட்சியாஞ் சிவோகம். (6)

விவேக சட்கம் முற்றிற்று.

## சிவானந்த போதம்.

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு
கல்லுண்டு மரமுமுண்டு
மனிதரிலு நீர்வாழுஞ் சாதியுண்டு
அநேககுல மனிதருண்டு
மனிதரிலு மனிதருண்டு வானவரு
மனிதராய் வருவ துண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே
அருமையென வகுத்தார் முன்னோர்.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

---

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத் பாதாசாரிய
சுவாமிகளருளிய

## விவேக சூடாமணி.

### பிரஹ்மபாவனுபலம்.

அடர்வுறு சயினி யத்து ளரசனைக் காண்பதேபோ
லுடன்முதற் றிரளி னுக்கு ளுணர்வுமாத் திரமே யாகித்
திடபரி சுத்த மாகத் திகழ்ந்திடு நின்னைக் கண்டவ்
விடரிலாப் பிரம னாளென் றெண்ணியவ் வடிவாய் நிற்பாய். 307

நிருமலப் பிரம மாக நின்னினீ யென்று நின்று
பிரமமா னந்த வுன்னிற் பிரிவுபோற் றோன்று நின்ற
திருசியத் திரளை யெல்லாந் தீரவே பிரவிலா பித்துப்
பரமவா னந்தம் பெற்றுப் பகுப்பிலாச் சாந்தி சார்வாய். 308

முற்றிற்று.

---